[23rd January 1961

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்களின் தயவினால் தான் "ஜன சக்தி" பத்திரிகை வெளிவருகிறது போன்ற தோரணையில் பதிலளித்தார்கள். இப்படி நடக்குமென்று எதிர் பார்த்திருந்தால், இந்தக் கேள்வியையே கேட்க வேண்டாமென்று சொல்லியிருப்பேன். அது இருக்கட்டும். இம்மாதிரி விளம்பரங் களையும் பிரசுரித்து, அதைக் கண்டித்து தலையங்கமும் எழுதினால், அது சங்கடமாக இருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் அப்படி எழுதுவதால், தங்கள் சாதனைகள் எல்லாம் உண்மையல்ல என்பது வெளிப்படும் என்று அஞ்சி அப்படிப்பட்ட பத்திரிகைகளுக்கு விளம்பரங்கள் கொடுத்து என்ன பயன் என்று கொடுக்காமல் இருக்கின்றார்களா என்று கேட்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எதையும் திரித்துக் கூறும் வன்மையுள்ளவர்கள் எதிர்க் கட்சியினர் என்பது எனக்குத் தெரியும். உண்மையை மறைத்து, பொய்யை மெய்யெனப்போல் சொல்வர். அதிலும் அந்த வன்மை கம்யூனிஸ்டுகளுக்கு அதிகம் இருக்கிறது என்பது எனக்குத் தெரியும்.

*Readership in Tamil*

* 110 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether any amount has been allocated for instituting a Readership in Tamil in the Delhi University for improvements of its library and a Lectureship in Tamil in the Allahabad University?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI N. K. PALANISAMI : What is the amount given?

THE HON. SRI C. SUBRAMANIAM : டெல்லிக்கு ரூ. 10,000 கொடுத்திருக்கிறார்கள். அலகாபாத்திற்கு ரூ. 4,000 கொடுக்கப் பட்டு இருக்கிறது. இவ்வாறு ஐந்து வருஷத்திற்கு கொடுப்பதாக இருக்கிறது.

*Loans*

* 111 *Q.*—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN (on behalf of SRI S. RAMALINGA PADAYACHI) : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில ளிப்பாரா—

வட்டார அபிவிருத்திப் பகுதிகளில் லோன் கொடுப்பதற்கு லோன் ஆர்.ஐ. சிபார்சு செய்வதற்குப் பதிலாக, கிராம சேவக்கு கள் சிபார்சு செய்யலாமென உத்திரவிட அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes. Orders have already been issued to this effect.